27th September 1958]

படும். அதோடு, இப்போது முன்பு ஜமீன் பிராந்தியங்களாயிருந்த கண்டம நாயக்கனூர் காடுகளிலும் தேக்கு பயிரிடுவது பரிசீலனை செய்யப்பட்டு வரு கிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Is there any proposal before the Government to request the Government of India to permit the import of teak from Burma in view of its prohibitive cost here?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Sir, I think there is no difficulty in importing teak.

SRI J. MATHA GOWDER: ஸார், கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது கூடலூரில் தேக்கு விளைவதாகச் சொன்னார்கள். கூடலூர், முதுமலைப் பகுதியில் சர்க்கார் பூமியில் மட்டுமல்லாமல் எல்லா பூமிகளிலும் தேக்கு பயிரிடுவதற்குத் திட்டம் வகுத்திருக்கிறார்களா? அப்படியானால், அது எத்தனை ஆண்டுகளில் பூர்த்தியாகும்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: என்னென்ன செய்ய வேண்டுமோ, அதெல்லாம் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN: தேக்கு மரம் பயிரிடப் படக்கூடிய இடங்களில் நீண்ட நாளாக சர்க்கார் புறம்போக்கு நிலங்களை சாகுபடி செய்து கொண்டிருக்கும் சாகுபடியாளர்களுக்கு இடையூறில்லாமல், பாதுகாப்புக் கொடுத்து தேக்கு பயிரிட சர்க்கார் முன் வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: சாகுபடியாளர்களுடைய கோரிக்கைகளையெல்லாம் ஒத்துக்கொள்ள வேண்டுமென்றால், ஒரு ஏக்கரிலும் தேக்கு பயிரிட முடியாது.

SRI N. MAHALINGAM: ராஜ்யப் பிரிவினையால் நமக்கு எத்தனை ஏக்கர் தேக்குக் காடுகள் நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: நஷ்டம் ஒன்றும் ஏற்படவில்லை. ஒரு பொருள் உரியவரிடம் சென்றால், அதை நமக்கு நஷ்டம் என்று கொள்ள முடியாது. ஆனால், நமக்கு ஏராளமாக காட்டுப் பிராந்தியம் குறைந்து இருக்கிறது.

*Single teacher schools*

*553 Q.—SRI N. R. THIAGARAJAN: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1954-ம் வருடம் அக்டோபர் முதல் 1957-ம் வருடம் அக்டோபர் முடிய மதுரை ஜில்லா போர்டில் நியமித்த ஓராசிரியர்கள் எத்தனை பேர்? 9-20 a.m.

(ஆ) அதில் ஹரிஜனங்கள் எத்தனை பேர்?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) 547.

(ஆ) 41.

SRI N. R. THIAGARAJAN: ஹரிஜனங்கள் எத்தனை பேர் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்று ஜில்லா போர்டு ஸ்பெஷல் ஆபீசருக்கு எழுதியதில் 64 பேர் நியமிக்கப்பட்டிருப்பதாக எழுதினார். அவர்களுடைய பெயர்கள் வேண்டுமென்று கேட்டதற்கு, பெயர் ஜாபிதா கொடுக்கப்பட வில்லை. 64 பேர்கள் நியமித்திருப்பதாகச் சொல்லுவது தவறு. இப் பொழுது கனம் அமைச்சர் அவர்கள் 40, 50 என்று கூறினார்கள். அது வும் சரியில்லை. ஹரிஜனங்கள் ஒருவரும் நியமிக்கப்படவில்லை. ஆகை யால், இதைப்பற்றி மீண்டும் பரிசீலனை......

MR. SPEAKER: The hon. Member is giving information. Why should he not write to the Hon. Minister?